

# முறைப் பெண்

*சதுரங்கா சொன்னார்:*

அந்த நாளில் நான் யார், இந்தச் சமூகத்தில் எனக்குள்ள பங்கு எது என்ற பிரக்ஞையே இல்லாமல் நான் பாட்டுக்குச் சுற்றி வந்தேன். இப்போது என் தோல் சிறிது தடித்து விட்டது. முப்பது வருடங்களுக்கு முன்னால் நான் பாலாக இருந்தேன். நான் சினிமாப் பத்திரிகையுலகில் ஒரு புள்ளி, ஒரு நல்ல நாவலை எழுதியிருக்கிறேன் என்பதெல்லாம் யாராவது பேச்செடுத்தால்தான் எனக்கு அவை நினைவுக்கு வரும்.

மைசூரிலிருந்து பெங்களூருக்கு இரயிலில் போய்க் கொண் டிருந்தேன். வண்டி மண்ட்யாவில் நின்றது. காப்பி குடிக்கலாம் என்று இறங்கினேன். அப்போது முதல் வகுப்புப் பெட்டி ஒன்றி லிருந்து சி.என்.கே. இறங்கினார். அவர் அன்றே இலக்கிய உலகில் பெரிய ஜாம்பவான். "எங்கே போகிறாய்?" என்று கேட்டார்.

"பெங்களூர்."

"அது சரி. இப்போ எங்கே? என்ன கேள்வி? வா, ஒரு கப் காப்பி சாப்பிடுவோம்."

நான் பணிவுடன் அவர் பின்னால் போனேன். அவரே காப்பி வாங்கினார்.

"பெங்களூரில் எவ்வளவு நாள்?"

"இரண்டு நாட்கள்."

"எங்கே தங்கப் போகிறாய்?"

நான் சொன்னேன்.

"சரி, எது எப்படியானாலும் நாளை நீ என்னுடன் சாப்பிடு கிறாய்" அவர் ஒரு முகவரியைச் சொன்னார்.

"சார், சாப்பாடு வேண்டாம், சார்."

"ஏன், என்ன?"

"என் அக்கா வீட்டில் நாளைப் பகல் சாப்பிட்டாக வேண்டும். ஏதோ விசேஷ பூஜை ஒன்று செய்கிறார்கள். அதற்குத் தான் நான் போய்க் கொண்டிருக்கிறேன்."

அவர் அப்போது 'முற்போக்கு' முகாமில் ஒரு முக்கிய தலைவர். என் பதில் அவருக்குத் திருப்தி அளிக்கவில்லை.

"இந்தக் காலத்தில் என்னப்பா பூஜை கீஜை எல்லாம்?"

நான் பதில் பேசாமல் நின்றேன். இரயில் கிளம்புவதற்கு. ஆயத்தமாயிற்று.

"சரி, காலை உணவு என்னுடன். அங்கே வேறு எழுத் தாளர்கள், பதிப்பாளர்கள் எல்லாரும் வருகிறார்கள்."

"சரி, சார்."

பெங்களூரில் அக்கா வீட்டை அடைந்தவுடன் நான் அவளிடம் தெரிவித்து விட்டேன். எனக்கு மறுநாள் காலையில் டிபன் எதுவும் வேண்டாம், நான் வேறொருவருடன் உணவு அருந்த வேண்டும்.

அது அவளுக்குத் திருப்தி அளிக்கவில்லை. ஆனால் அவள் அப்போது ஒன்றும் சொல்லவில்லை.

மறுநாள் காலை குளித்துவிட்டு வெளியே கிளம்பத் தயாராகிக் கொண்டிருந்தேன். அக்காவின் மூத்த மகள் சுசீலா காப்பியை எடுத்துக்கொண்டு வந்தாள். "எங்கே மாமா, இவ்வளவு சீக்கிரம் வெளியே கிளம்புகிறீர்கள்?"

"இதோ பார், உன் அம்மாவிடம் முன்பே சொல்லியிருக் கிறேன். சரியாக ஒரு மணிக்கெல்லாம் வந்து விடுகிறேன்."

"அப்படியானால் ஏதாவது ஆகாரம் பண்ணிவிட்டுப் போங்கள்."

"நான் ஒரு நண்பருக்கு வாக்குக் கொடுத்திருக்கிறேன். காலை ஆகாரம் அவருடன்தான்."

“நான் உங்களுக்காக மிகவும் ஆசையுடன் ஒய் கடுபு செய்திருக்கிறேன் மாமா.”

“ஒன்றும் முடியாது. இந்தக் காப்பியே அரைத் தம்ளர்தான் குடிக்கப் போகிறேன்.”

அவள் கோபித்துக் கொண்டு உள்ளே போனாள். அடுத்த நிமிடம் அவளுடைய அம்மா வந்து விட்டாள். “ஏண்டா குழந்தை ஆசையாகக் கேட்கிறாள், கையை நனைத்து விட்டுப் போவது தானே?”

“இல்லை, அக்கா...”

“அதெல்லாம் முடியாது. நீ வருகிறாய் என்று அவள் ஆசை யோடு மாவரைத்து வைத்தாள். இரண்டு கடுபுவாவது தின்று விட்டுப் போ.”

“இல்லை, அக்கா. ஒன்று வேண்டுமானால் எடுத்துக் கொள்கிறேன்.”

“நீ எனக்கு ஒன்றும் தயவு பண்ண வேண்டாம்.”

“சரி, சரி. இலையைப் போடு.”

கடுபுவை நீதான் பார்த்திருப்பாயே. இட்டிலி மாதிரி இருக்கும். ஆனால் ஒரு கடுபு நான்கு இட்டிலிக்குச் சமானம்.

எடுத்த எடுப்பிலேயே சுசீலா எனக்கு இரு கடுபுகள் போட்டு நிறையக் கொத்சுவும் பரிமாறினாள். கடுபுவில் கடலைப் பருப்பு, சிறிது மிளகு எல்லாம் வறுத்துப் போட்டிருந்தது. மிகவும் சிரத்தை யுடன் செய்யப்பட்டிருந்தது என்பதில் சந்தேகமே இல்லை. சாதாரணமாகவே அக்கா வீட்டில் சமையல் பிரமாதமாக இருக்கும்.

பிரிகேட் ரோடில் நடந்து போய்க் கொண்டிருக்கும்போதே சி.என்.கே.யிடம் எப்படி எல்லாம் சால்ஜாப்பு சொல்வது என்று ஒத்திகை செய்து கொண்டிருந்தேன். மூன்று கடுபுகளும் ஐந்து கரண்டி கொத்சுவும் என் சுவாசத்தைச் சிரமமான செயலாக மாற்றியிருந்தன.

“சார்! சார்!” யாரோ கைதட்டி அழைப்பது கேட்டது. அது பெண் குரல். சீதாராம் கிராமபோன் கம்பெனி மாடியிலிருந்து தான் என்னை யாரோ அழைத்துக் கொண்டிருந்தார்கள். கிராமபோன் கம்பெனி என்று பெயரிருந்தாலும் அந்த சீதாராம்

தான் என் நாவலை வெளியிட்டிருந்தான். மாடியில் சீதாராமின் மனைவி நின்று கொண்டிருந்தாள்.

நான் படியேறி மேலே சென்றேன். "என்ன சார்! இந்தப் பக்கம் வந்துவிட்டு எங்களைப் பார்க்காமலே போகிறீர்களே?" என்று அவள் கேட்டாள்.

"இங்கே வேறு ஒரு வேலையாக ஒருவரைப் பார்க்க வந்தேன், அம்மா. சீதாராம் வீட்டிலில்லையா? நான் மறுபடியும் வருகிறேன்."

"உங்களைச் சரியாகக் கவனிக்கவில்லை என்று அவரிடம் எனக்குத் திட்டு வாங்கித் தரப் போகிறீர்களா? அவர் சுபாவம் தெரியாதா? டேய் பையா! போய் சாருக்கு ஸ்வீட், காரம், காப்பி வாங்கி வா!"

"ஐயையோ! வேண்டாம்மா! வேண்டாம்மா!"

"நான் இன்றைக்கு அடிப்பட்டுச் சாகவேண்டுமா? நீங்கள் இப்படியே போய்விட்டீர்கள் என்று தெரிந்தால் அவர் என்னைக்கொன்று போட்டு விடுவார்."

எனக்கு அடி, திட்டு, கொலை என்று காதால் கேட்டாலே எல்லா நாடியும் ஒடுங்கிவிடும். ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன்.

போன பையன் ஒரு பெரிய தாம்ளத்தைக் கொண்டு வந்து வைத்தான். இரண்டு குலாப்ஜாமுன், இரண்டு மசால்தோசைகள், காப்பி.

நான் கண்களை மூடிக் கொண்டேன். மூளை வேலை செய்யவில்லை. வெறி வந்தவன் போல் எல்லாவற்றையும் வாயில் திணித்துக் கொண்டு விழுங்கினேன். "போய் வருகிறேன்" என்று சொல்லிப் பதிலுக்குக் காத்திராமல் படியிறங்கிச் சாலையில் ஓடினேன்.

பெங்களூர் எனக்கு நன்கு தெரிந்த ஊர்தான். ஆனால் அன்று ஏனோ சி.என்.கே. சொன்ன வீட்டைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சுற்றிச் சுற்றி வந்து மீண்டும் பிரிகேட் ரோட் முனையில் நின்றேன்.

"சாரு! ஓ சாரோய்!"

அப்போதுதான் நினைவு வந்தது. மேலே பார்த்தேன். நான் மீண்டும் சீதாராம் கிராம போன் கம்பெனி வாசலில்தான் நின்று கொண்டிருந்தேன்.

“என்ன சாரு? கதை எழுதுகிறவர் என்றால் வேண்டியவர்களை யெல்லாம் மறந்து விடுவார்களா? பெங்களூர் வந்துவிட்டு எப்படி என்னைப் பார்க்காமல் தாண்டிப் போகிறீர்கள்!”

“இல்லை, சீதாராம். இங்கே ஒரு வீட்டுக்கு சி.என்.கே. வரச் சொல்லியிருந்தார். இடம் தெரியாமல் தேடிக் கொண்டிருக்கிறேன்.”

“என்ன கதை விடுகிறீர்கள், சார்? முதலில் வாருங்கள் மேலே! டேய் பையா!”

அவன் பையனை அனுப்புவதற்குள் அதைத் தடுத்துவிட வேண்டும் என்று ஒரே தாவலில் மாடியைப் போய் அடைந்தேன். “ஒன்றும் வேண்டாம், சீதாராம். இப்போதுதான் உன் மனைவி எனக்கு வயிறு முட்ட நிறைய வாங்கித் தந்தாள். இதோ பார், என் கைகூட இன்னும் உலரவில்லை.”

“சும்மா கதை விடாதீர்கள் சார். நான் வந்தபோது அவள் வீட்டிலேயே இல்லையே! டேய் பையா, போய் சாருக்கு ஸ்வீட், காரம், காப்பி வாங்கி வா!”

“சற்று முன் இருந்தாள், சீதாராம். வேண்டுமானால் பையனைக் கேட்டுப்பார், எனக்கு நேரமாகிறது.”

“அதெல்லாம் பேச்சில்லை. நீங்கள் பெரிய கதாசிரியராக இருக்கலாம். ஆனால் என் வீட்டு வாசற்படி மிதித்துவிட்டுச் சாப்பிடாமல் போக முடியாது. போடா பையா! போ சீக்கிரம்!”

“சீதாராம்!... சீதாராம்!”

நான் கெஞ்சினேன். ஒன்றும் பயனில்லை. அந்தப் பையன் மீண்டும் இரு மசால் தோசைகள், இரு குலாப்ஜாமுன், காப்பி வாங்கி வந்துவிட்டான்.

சீதாராம் சொன்னான்: “இன்னிக்கு என் வீட்டிலே அடுப்பு மூட்ட வில்லை சார். அதனால்தான் புரானா கல்லி டிபன் ரூமிலிருந்து வாங்கி வரவேண்டியிருக்கிறது.”

“இன்றைக்கு ஒரு நாளிலேயே உன் வீட்டிலிருந்து அந்த டிபன் ரூமுக்கு நிறைய வியாபாரம்.”

“கேலி செய்கிறீர்களே சாரு! ஒரு டிபன் காபிக்கு இப்படிச் சொல்லுகிறீர்களே! சூடாறுவதற்கு முன் சாப்பிடுங்க சாரு. இன்றைக்கு உங்களை விடமாட்டேன்!”

நான் அதை எப்படிச் சாப்பிட்டேன், எப்படி எழுந்து சீதாராமிடமிருந்து விடுவித்துக் கொண்டேன் என்றெல்லாம் எனக்குத் தெரியாது. மயக்க நிலையில் பிரிகேட் ரோடை அடைந்து திரும்ப அக்கா வீட்டுக்கே போய் விடலாம் என்று ஓர் ஆட்டோ ரிக்ஷாவைக் கூப்பிட்டேன். அது நாற்சந்தி மைய வளையத்தைச் சுற்றி என்னிடம் வந்து சேருவதற்குள் பின்னாலிருந்து ஏழெட்டுபேர் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் மத்தியில் சி.என்.கே.!

''என்னப்பா! இப்போதே மிகப் பெரிய மனிதனாகி விட்டாயா? உனக்காக எவ்வளவு நேரம் காத்திருப்பது?"

"மன்னிக்க வேண்டும் சார். நான் அப்போதே கிளம்பி விட்டேன், இடம் தெரியவில்லை."

"என்னிடமே காது குத்துகிறாயா?"

ஆட்டோ ரிக்ஷா எங்கள் அருகே வந்து நின்றது. ஆனால் வேறு யாரோ அதை அமர்த்திக் கொண்டுவிட்டார்கள்.

"வா, டிபன் சாப்பிட்டுவிட்டு வருவோம்."

"நான் சாப்பிட்டு விட்டேன், சார்."

சி.என்.கே. என் சட்டையைப் பிடித்துக் கொண்டார். "நேற்றைக்கு நான் என்ன சொன்னேன்? டிபன் சாப்பிட வருகிறேன் என்றாயல்லவா?"

"ஆமாம் சார்! ஆமாம், சார்!"

"வா, அப்போது. உனக்காக இவ்வளவு நேரம் நாங்கள் எல்லோரும் வயிறு காயக் காத்திருந்துவிட்டு இப்போதுதான் டிபனுக்குப் போகிறோம். வா பேசாமல். எனக்குக் கெட்ட கோபம் வரும்."

அந்த ஏழெட்டுப் பேர்களில் ஒருவர்கூட சி.என்.கே. பேச்சுக்கு மறு பேச்சுப் பேசமாட்டார்கள். எனக்குப் பரிந்து ஒரு சிறு ஒலி கூட அவர்களிடமிருந்து வராது.

நான் பலி ஆடு போல் அவர்களோடு போனேன். சி.என்.கே. அன்று என்ன பேசினார், கர்நாடகத்து முற்போக்கு முகாம் புது மனிதனை உண்டாக்க என்னென்ன திட்டங்கள் வகுத்தது என்றெல்லாம் எனக்குத் தெரியாது. என் முழு உடல், மூளை, ஆத்மா, சித்தம், புத்தி எல்லாமே என் வயிற்றைப்பற்றியும், சி.என்.கே.

எனக்காக உத்தரவிடப் போகும் டிபன் பற்றிய நினைவிலும் இருந்தது. எப்படி அந்தக் கும்பலோடு நடந்து கொண்டு ஒருவர் மீதும் இடிக்காமல் தடுக்காமல் நடக்க முடிந்தது என்று ஆச்சரியமாயிருக்கிறது.

ஒரு சந்தில் திரும்பி நாங்கள் எல்லோரும் ஒரு சிறு உணவுக் கடை முன்னால் நின்றோம். சி.என்.கே. என்னைக் கேட்டார்: "நீ இங்கே இதற்கு முன்னால் வந்திருக்கிறாயா?"

"இல்லை, சார்."

"இந்தப் பேட்டையிலேயே மிகவும் பெயர் போன இடம். இந்தப் புரானா கல்லி டிபன் ரூம் குலாப்ஜாமுன் மசால் தோசைக்கு முன்னால் உங்கள் தேவர்களின் அமிருதம் பிச்சை வாங்க வேண்டும்."

எனக்கு 'புரானா கல்லி டிபன் ரூம்' என்பதுதான் காதில் விழுந்தது. என் உடம்பெல்லாம் விரைத்தது. துவண்டது. துடித்தது. கல்லாயிற்று. கட்டையாயிற்று. உருகிற்று. கொதித்தது. உறைத்தது. வெடித்தது. சுருங்கியது. சுருண்டு கொண்டது. பிளந்து கொண்டது. பொடிப் பொடியாயிற்று.

புரானா கல்லி டிபன் ரூமில் எதையுமே ஜதை ஜதையாக வியாபாரம் செய்வார்கள் போல் இருக்கிறது. மீண்டும் இரு குலோப்ஜாமுன், இரு மசால் தோசைகள். சி.என்.கே. அகோரப் பசியில் இருந்தார். இன்னும் இரு குலோப்ஜாமுன், இரு மசால் தோசைகள். மிகவும் முக்கியமானதும், நுணுக்கமானதும், ரசமானதுமாகத்தான் அவர் பேச்சு இருந்திருக்க வேண்டும். அந்த ஏழெட்டு இலக்கிய அன்பர்கள் கண் சிமிட்டாமல் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவ்வப்போது அவர்கள் உதிர்த்த ஓரிரு சொற்கள்கூட சி.என்.கே. சொன்னதையே ஆமோதிப்பது போலவும் வலுப்படுத்துவது போலவும் தான் இருந்தன. இரண்டாவது சுற்று காப்பிக்கு சி.என்.கே. உத்தரவிட்ட போது, நான் எழுந்திருந்தேன். "சார், நான் போகவேண்டும்" என்றேன்.

"இந்த நூற்றாண்டின் புரட்சிப் புதுமை நாவலாசிரியன் வரலட்சுமி பூஜையை நேரிலிருந்து நடத்தித் தரக் கிளம்புகிறான். எல்லாரும் ஜய விஜயீ பவ வாழ்த்துங்கள்!"

நான் அந்தச் செல்லப் பரிகாசத்தை நின்று ரசித்திருக்க வேண்டும். சி.என்.கே. உண்மையிலேயே என் மீது மிகுந்த மதிப்பு கொண்டிருக்க வேண்டும். ஆனால் அந்த நேரத்தில் ஒரே

நினைவுதான் என்னை இயக்கிக் கொண்டிருந்தது. எப்படியாவது என் அக்கா ஏமாற்றமடையாமல், கோபப்பட்டுக் கொள்ளாமல் பிற்பகல் பொழுது செல்ல வேண்டும்.

வெகு வேகமாக நடந்தேன். அந்த நீளச் சாலையின் நடை பாதையில் ஒரு மைல் நடந்த பின் மீண்டும் திரும்பி அதே வழியாக நடந்தேன். நான் ஆவேசம் பிடித்தவன் போல் நடப்பதைப் பலர் பார்த்து பிரமித்தனர்.

அரைமணி இப்படி விசை போல் நடந்த பிறகு எனக்கு ஜென்டில்மென்ஸ் கிளப் ஞாபகம் வந்தது. அது அங்கிருந்து சற்றுத் தள்ளியிருந்தது. அந்த வேளையில் கிளப் அநேகமாகக் காலியாக இருந்தது.

நான் ஒரு மார்க்கர் பையனை அழைத்து அவனிடம் இரண்டு ரூபாய் கொடுத்தேன். "வா, என்னுடன் டென்னிஸ் விளையாடு" என்றேன்.

"இப்பவா சார். நான் சாப்பிடப் போகவேண்டுமே?" என்றான்.

"நானும் சாப்பிடத்தான் போக வேண்டும். அதனால்தான் உன்னை ஆடக் கூப்பிடுகிறேன். வேண்டுமானால் பணம் தருகிறேன்."

"வேண்டாம் சார், வேண்டாம் சார்."

நானும் அவனும் இரு செட்கள் ஆடினோம். மிகச் சாதாரண மாக அடிக்க வேண்டிய பந்தையெல்லாம் நான் ஓடி ஓடி அடித்தேன். அந்தப் பையனே ஒரு சந்தர்ப்பத்தில் "ஏன் சார், ரொம்பக் கஷ்டப்பட்டுக் கொள்கிறீர்கள்?" என்று கேட்டான்.

ஜென்டில்மென்ஸ் கிளப்பிலிருந்து என் அக்கா வீட்டுக்கு ஓடினேன். என் அக்காவும் அவள் கணவரும் பூஜை முடித்து எனக்காகக் காத்திருந்தார்கள். அக்கம் பக்கத்து வீடுகளிலிருந்து ஐந்தாறு பேர் வந்திருந்தார்கள்.

நான் அக்காவையும் அவள் கணவரையும் இன்னொரு அறைக் குக் கூப்பிட்டேன். அப்படியே அவர்கள் காலில் விழுந்தேன். இருவரும் பதறிப் போய்விட்டார்கள்.

"அக்கா! பாவா! எனக்கு உறுதிமொழி தர வேண்டும்!"

"என்னடா! என்ன ஆயிற்று?"

"என்னைச் சாப்பிடச் சொல்லக் கூடாது. உறுதிமொழி கொடுத்தால்தான் காலை விடுவேன்."

வந்தவர்கள் சிலர் அறையில் எட்டிப் பார்த்தார்கள். என் அக்காவுக்குக் கலவரமும் கூச்சமும் அதிகரித்து, "விடு காலை!" என்றாள்.

நான் எழுந்து யார் கண்ணையும் சந்திக்காமல் மாடிப்படிக் கூண்டுக்குச் சென்றேன். அங்கேதான் அந்த வீட்டுப் படுக்கை யெல்லாம் அடுக்கி வைத்திருக்கும்.

நான் மெத்தைக் குவியல் மீது ஏறிச் சுருண்டு படுத்துக் கொண்டேன். சுசீலா வந்தாள், "மாமா, மாமா!" என்று கூப்பிட்டாள்.

"சுசீலா, என்னைச் சிறிது நேரம் வெறுமனே விடு. நாம் பிறகு பேசுவோம்."

"இப்படியெல்லாம் பேசுவதற்கு இங்கு வராமலே இருந் திருக்கலாமே."

"கோபித்துக் கொள்ளாதே, சுசீலா. கடவுள் சத்தியமாகச் சொல்கிறேன். கடவுள் என்னைக் கோபித்துக் கொள்ள மாட்டார்."

சுசீலா அழ மாட்டாத குறையாகச் சென்றாள். ஒரு தம்ளருடன் திரும்பி வந்தாள்.

"மாமா, இந்தப் பாயசத்தையாவது ஒரு வாய் சாப்பிடுங்கள்."

நான் கண் திறந்து பார்த்தேன். நான் அங்கு சாப்பிடாததில் சுசீலாவுக்கு இவ்வளவு துக்கம் இருக்கும் என்று என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. அவள் கொண்டு வந்த தம்ளரை வாங்கிக் கொண்டு மடக் மடக் கென்று வாயில் ஊற்றி விழுங்கினேன். தம்ளரைத் திரும்ப அவள் கையில் கொடுத்து விட்டு அப்படியே நினைவற்றுப் படுக்கையில் விழுந்துவிட்டேன்.

அன்று இரவு அவர்கள் யாரும் வழக்கமான படுக்கையில் படுத்துக் கொள்ளவில்லை. காரணம், நான் அவர்கள் மெத்தைக் குவியல் மீது அடித்துப் போட்டவன் போல் தூங்கிக் கொண் டிருக்கிறேன். அன்று பிற்பகல், இரவு, மறுநாள் காலையும் விடாது தூங்கிக் கொண்டிருக்கிறேன்.

மறு நாள் புனர்பூஜைக்காக என் அக்கா ஸ்நானம் முடித்துத் தலைமயிரைத் தளதளவென்று கோதி முடிந்திருந்தாள். உடலுள் இலேசான மஞ்சள் சாயை. நெற்றியில் பெரிய குங்குமப்பொட்டு. பொன் நிறத்தில் பட்டுப்புடவை. மகாலட்சுமி போலவே இருந்தாள். இப்படி மணிக்கணக்கில் அசாதாரணமாகத் தூங்குகிறேனே என்று என்னை எழுப்பிக் காப்பி கொடுப்பதற்காக என் தோளை அசைத்தாள். நானும் விழித்தேன். அவளை ஒரு கணம்பார்த்து விட்டு எழுந்திருக்க முற்பட்டேன்.

அவ்வளவுதான். சீறும் எரிமலையிலிருந்து கற்குழம்பு பொங்கிப் பாய்வதுபோல் இருந்தது. அந்த அறையே என் வயிற்றுக்கு இழைக்கப்பட்ட ஒருநாள் பலாத்காரத்தின் சாட்சியத்தை ஏந்திக்கொண்டு நின்றது. நான் வாந்தியெடுத்தது என் அக்காவின் பட்டுப் புடவையைப் பாழடித்துவிட்டது. என் வயிற்றின் குமுறல் நிற்க வெகு நேரமாயிற்று. அந்த இடத்தை ஒழுங்குபடுத்த நிறைய உழைப்பும் தண்ணீரும் தேவைப்பட்டது.

அடுத்து எனக்குக் கடுமையான சுரம். டைபாய்டு சுரக்காரனை வீட்டில் வைத்திருக்கக் கூடாது என்று டாக்டர் சொன்னதையும் மீறி என் அக்காவும் சுசீலாவும் என்னை மாடிப்படி அறையிலேயே ஒரு கட்டிலில் படுக்க வைத்துப் பார்த்துக்கொண்டார்கள். என் அம்மாவும் பெங்களூருக்கு வந்து அவள் பங்குக்கு அவர்கள் இருவரையும் படுத்தினாள்.

பிற்பாடுதான் தெரிந்தது, அந்த பூஜையே சுசீலாவின் திருமணத்தை முன்னிட்டுத்தான். அவளை எனக்குத்தான் தருவ தாக இருந்தது. ஆனால் பூஜை அந்த விளைவை ஏற்படுத்த வில்லை. சுரம் தணிந்து நான் மைசூர் போய்ச் சேர்ந்து ஒரு மாத காலத்துக்குள் அவளுக்கு வேறிடத்தில் கல்யாணம் நிச்சயமாகி விட்டது.

1983